[25th January 1961

**SRI S. NAGARAJA MONIGAR :** ஸார், நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்கு ஏதாகிலும் யோசனை சொல்லியிருக்கிறார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** ஆங்கிலத்தில் சொன்னேன், "நோ" என்று. இந்த அரசாங்கம் அபிப்பிராயம் ஒன்றும் தெரிவிக்கவில்லை.

### *Elections*

* 188 *Q.*—**SRI S. M. ANNAMALAI :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தேர்தலில் ஊர்வலங்கள் நடத்துவது பற்றி மத்திய சர்க்கார் நம் அரசாங்கத்தின் ஆலோசனையைக் கேட்டார்களா ?

(இ) அப்படியானால், மாநில சர்க்கார் அனுப்பிய பதில் என்ன ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** (*a*) No, Sir.

(*b*) Does not arise.

* 189 *Q.*—**SRI S. M. ANNAMALAI :**
**SRI A. VEDARATHNAM :** } கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரட்டை மெம்பர்களின் தொகுதிகளை ஒற்றை மெம்பர் தொகுதிகளாகப் பிரிப்பதைப் பற்றியும், தேர்தல் வாக்குச் சீட்டுகளில் குறிபோடும் முறையைப்பற்றியும் குறித்து மத்திய சர்க்கார் மாநில சர்க்காரின் ஆலோசனையைக் கேட்டார்களா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) The Election Commission has invited suggestions regarding the splitting up of the two-member constituencies into single-member constituencies. Details are being examined.

In regard to the introduction of the marking system of voting at elections, the Election Commission enquired whether it would be necessary to adopt the old ballotting system of voting instead of the marking system in any remote and very backward areas in this State and the Commission was informed that the marking system of voting could be adopted without difficulty in all the constituencies in the State in the General Elections, 1962.

**SRI S. M. ANNAMALAI :** நம் மாநிலத்தில், இப்படி மார்க் செய்யப்படும் அளவுக்கு மக்கள் தயாராக இல்லை என்று சர்க்காருக்குத் தெரியுமா ? பிற்போக்கான பகுதிகளிலாவது இம்முறையைக் கொண்டு வராமல் இருப்பார்களா ?